கிடாம்பியப்புள்ளார் ஸ்ரீநிகமாந்த மஹாகுருவுக்கு ஸாக்ஷாதாசார்யர். அவர்க்குத் தனியன் செய்யவேணுமென்றால் தச்சிஷ்யரான ஸ்வாமியே செய்திருக்கவேண்டும். ஸ்வாமி செய்தருளின தனியன் "யஸ்மாதஸ்மாபிரேதத் யதிபதி கதித ப்ராக்தந ப்ரக்ரி யோத்யத்" இத்யாதியான பரமகம்பீர மஹாச்லோகம் ப்ரஸித்தமாகவுள்ளது. இதுவே எங்கும் அநுஸந்தான பரம்பரையிலுள்ளது. ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபத்திலும் *நமோ ராமாநுஜார்யாய தனியனே சொல்லப்பட்டு வருவதாக உபோத்காதகாரர் எழுதியிருப்பது பெரும்புளுகு. வ்யபகிஷ்டரான ஒரு மஹானும் இதை இசையார். ஸ்வாமி ஸாதித்த தனியனைத் தள்ளி இந்த சுலோகத்தைக் காலக்ஷேப பரம்பரையில் கூட்டிக்கொள்ள முன்வந்தவர் இதுகாறும் ஒருவருமில்லை. ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனுக்குப் பிரதியாக ராமாநுஜ தயாபாத்ரத் தனியனை ஸ்ருஷ்டித்தவர்கள், * நமச் ஸ்ரீசைல நாதாய தனியனுக்கும் பிரதியாக * நமோ ராமாநுஜார்யாய தனியனை ஸ்ருஷ்டித்தார்க ளென்பதில் என்ன ஸந்தேஹம்? ஸ்ரீமாக் வேங்கடநாதார்ய தனியனில் சில குறைகள் கண்டு ராமாநுஜதயாபாத்ரத் தனியன் செய்யப்பட்டதாகச் சொல்லி வருவதோடு நில்லாமல் எழுதியும் வைத்திருப்பவர்கள் இந்த நமோ ராமாநுஜார்யாய தனியனைப் பற்றியும் அவசியம் பேசவேண்டுமே. உபோத்காதகாரருக்கு இதை தேசிக க்ருதமாக எழுதத் துணிவு பிறக்கவில்லை. அப்பாசார்ய க்ருதம், குப்பா சார்ய க்ருதம்........... என்றெழுதிவைக்கவும் கைவரவில்லை. கோவிற் சண்டைகளைக் கிளப்பினகாலத்தில் சில அவ்யபதேச்யர்கள் போட்டிக்காக எழுதி வைத்ததென்னு முண்மையே ஸ்திரீக்ருதமாயிற்று. அப்புள்ளாரும் தேசிகனும் ஜீவித்திருந்த காலம் வரையில் இந்த ச்லோகம் தலைகாட்டிற் றில்லையென்பது ஸிலாலிகிதம் பிறகு எப்போது தோன்றிற்று? இதற்குக் கர்த்தா யார்? என்கிற விசாரத்தை ப்ராமாணிகர்களனைவரும் செய்யக் கடமைப்பட்டவர்கள். செய்யுமளவில் நம்முடைய ஸித்தாந்தமே அப்ரதிஹத ஸித்தாந்தமாய்த் திகழும்.

தனியன்களை யதேஷ்டமாக மாற்றுவதென்பது பெரும்பாதகமான செயல் என்பதைத் திடமாக வுணரவேணும் நம்மாழ்வாருடைய *மாதாபிதா தனியனையும், உடையவருடைய *யோநித்ய மச்யுத தனியனையும் விட்டு வேறு தனியன்களைப் பரிக்ரஹித்தது கி. பி. 18 அல்லது 19-வது நூற்றாண்டிலேயொழிய அதற்கு முன்பு அல்ல. முன்னமே மாற்றியிருந்தால் திவ்யப்ரபந்தப் பொதுத் தனியன்களின் அநுஸந்தானத்தில் * மாதாபிதாவும் * யோநித்யமும் இவர்களுக்கு வந்திருக்க அவகாசமே யில்லை. முழுவதும் விச்வாமித்ர ஸ்ருஷ்டி யென்பதை ஒவ்வொரு விஷயமும் மூதலிக்கும். ... ... ... ... *

— முற்றிற்று —

---